නව/පැරණි නිර්දේශය – புதிய/பழைய பாடத்திட்டம் – New/Old Syllabus

NEW/OLD

ශ්‍රී ලංකා විභාග දෙපාර්තමේන්තුව
இலங்கைப் பரீட்சைத் திணைக்களம்
Department of Examinations, Sri Lanka

අධ්‍යයන පොදු සහතික පත්‍ර (උසස් පෙළ) විභාගය, 2019 අගෝස්තු
கல்விப் பொதுத் தராதரப் பத்திர (உயர் தர)ப் பரீட்சை, 2019 ஓகஸ்ற்
General Certificate of Education (Adv. Level) Examination, August 2019

30.08.2019 / 0830 – 1030

සන්නිවේදනය හා මාධ්‍ය අධ්‍යයනය I
தொடர்பாடலும் ஊடகக் கற்கையும் I
Communication and Media Studies I

29 T I

පැය දෙකයි
இரண்டு மணித்தியாலம்
Two hours

**அறிவுறுத்தல்கள் :**

※ **எல்லா** வினாக்களுக்கும் விடை எழுதுக.

※ விடைத்தாளில் தரப்பட்டுள்ள இடத்தில் உமது **சுட்டெண்ணை** எழுதுக.

※ விடைத்தாளின் மறுபக்கத்தில் தரப்பட்டுள்ள அறிவுறுத்தல்களைக் கவனமாக வாசித்துப் பின்பற்றுக.

※ **1** தொடக்கம் **50** வரையுள்ள வினாக்கள் ஒவ்வொன்றுக்கும் (1), (2), (3), (4), (5) என இலக்கமிடப்பட்ட விடைகளில் **சரியான** அல்லது **மிகப் பொருத்தமான** விடையைத் தெரிந்தெடுத்து, **அதனைக் குறித்து நிற்கும் இலக்கத்தைத் தரப்பட்டுள்ள அறிவுறுத்தல்களுக்கு அமைய** விடைத்தாளில் **புள்ளடி** (×) இடுவதன் மூலம் காட்டுக.

**1.** வெகுசன ஊடகங்களின் இருப்பிற்கு அடிப்படையாகத் தேவைப்படுவது எது /எவை?
(1) கருத்துக்கள் (2) ஒழுங்கமைப்புக்கள் (3) நிறுவனங்கள்
(4) தகவல் (5) விளங்கறிவு

**2.** தொடர்பாடல் மாதிரியொன்றில் மனப்பாங்கு பற்றிய பகுப்பாய்வை மேற்கொண்டவர் / மேற்கொண்டவர்கள்
(1) டேவிட் கே. பெர்லோ (2) ஷனொன், வீவர் ஆகியோராவர் (3) வில்பர் ஷ்ராம்
(4) ஹரோல்ட் டீ. லாஸ்வெல் (5) சார்ள்ஸ் ஒஸ்குட்

**3.** ஆசிரியர் வகுப்பறையில் பயன்படுத்திய சில சொற்களின் பொருளை அறியாத மாணவர்கள் கலைக்களஞ்சியத்தைப் புரட்டிப் பார்த்தனர். இச்சந்தர்ப்பத்தில் மாணவர்களால் மேற்கொள்ளப்பட்டது
(1) பொருட்கோடல் (2) குறிமுறையாக்கம் (3) குறிமுறையவிழ்ப்பு
(4) மொழிபெயர்ப்பு (5) பகுப்பாய்வு

**4.** ஒரு நாட்டில் மாற்று ஊடகங்களின் பயன்பாடு விரிவுபடுத்தப்படுவதற்கான பிரதான காரணமாவது,
(1) புதிய ஊடகங்கள் வலுவூட்டப்படுதல் (2) விளங்கறிவு வலுவூட்டப்படுதல்
(3) சுயாதீன ஊடகப் பாவனை (4) அதிகாரவாத ஊடகப் போக்கு
(5) அச்சு நடவடிக்கைகள் இலகுவடைதல்

**5.** அன்றாட வாழ்வில் ஒரு தனிநபரின் தொடர்பாடல் கொள்திறனில் அதிகளவு பயன்படுத்தப்படுவது
(1) செவிமடுத்தலுக்காகும். (2) பேசுவதற்காகும். (3) வாசிப்பதற்காகும்.
(4) எழுதுவதற்காகும். (5) ஆற்றுகைக்காகும்.

**6.** வாய்மொழியல்லாத தொடர்பாடலின் இயல்பு **அல்லாதது**
(1) தொடர்ச்சியான செயன்முறையாக இருத்தல்
(2) அகவயத் தன்மையிலிருந்து விடுபட்டிருத்தல்
(3) பல்வேறு முறைகளைப் பயன்படுத்தக்கூடியதாயிருத்தல்
(4) தன்னெழுச்சியாகவும் செயற்படக்கூடியதாயிருத்தல்
(5) பொதுவான ஒழுங்குவிதி காணப்படாதிருத்தல்

**7.** அபிவிருத்தித் தொடர்பாடலில் மதகுரு, சுதேச மருத்துவர், அபிவிருத்தி உத்தியோகத்தர் ஆகியோரை இணைத்துக் கொள்வதன் மூலம் தெளிவுபடுத்தப்படுவது
(1) பங்குபற்றல் அணுகுமுறை (2) தனிநபர் விம்பம்
(3) சமுதாய ஊடக அணுகுமுறை (4) இருபடிநிலைக் கோட்பாடு
(5) பெறுநர் மைய அணுகுமுறை

**8.** கடற்கரையோரக் கிராமமொன்றின் மக்களுக்குச் சுனாமி அனர்த்தச் சந்தர்ப்பத்தில் அவ் அச்சுறுத்தல் பற்றிய அறிவிப்பு மிகவும் துரிதமாகவும் பரவலாகவும் வழங்கப்படக் கூடியது
(1) எழுத்துமூலத் தொடர்பாடல் மூலமாகும். (2) கட்புலத் தொடர்பாடல் மூலமாகும்.
(3) செவிப்புலத் தொடர்பாடல் மூலமாகும். (4) செவிப்புல - கட்புலத் தொடர்பாடல் மூலமாகும்.
(5) எழுத்துமூல - கட்புலத் தொடர்பாடல் மூலமாகும்.

**9.** குறுகியகால ஞாபகத்தில் உள்ள விடயங்களை நீண்டகால ஞாபகமாகக் கொண்டு செல்வதில் தாக்கம் செலுத்தும் பிரதான காரணியாக **அமையாதது**
(1) அழுத்தமாகக் கூறல் (2) பயன்படுத்துதல் (3) ஆழ்ந்து சிந்தித்தல்
(4) கற்பனை செய்தல் (5) பயிற்சி செய்தல்

**10.** படைப்பாக்குநர் ஒருவர் தன் படைப்பாக்கங்களை மக்கள் உணரும் வண்ணம் முன்வைக்க இயலுமாயிருப்பது
(1) மொழிசார்ந்த விளக்கத்தைக் கொண்டிருப்பதனாலாகும்.
(2) கருப்பொருள் பற்றிய விளக்கத்தைக் கொண்டிருப்பதனாலாகும்.
(3) ஆழ்பரிவைக் கொண்டிருப்பதனாலாகும்.
(4) புலனுணர்வுச் சக்தியைக் கொண்டிருப்பதனாலாகும்.
(5) வெகுசன உணர்வு பற்றிய விளக்கத்தைக் கொண்டிருப்பதனாலாகும்.

**11.** பாடசாலையில் ஆசிரியர் குழாத்தினர் தமக்கிடையே பரஸ்பர ஒத்துழைப்பைப் பேணி, குழு உணர்வுடன், களைப்பைப் பற்றிச் சிந்திக்காதும் செயற்பட்டதால் பாடசாலையின் பரீட்சைப் பெறுபேற்றை வரலாறு காணாத அளவிற்கு உயர்த்த முடிந்தது. அவர்களது வெற்றியின் பின்னணியில் இருப்பது
(1) பொறுப்புணர்வு (2) பொறுப்புக்கூறல் (3) கடமையுணர்வு
(4) ஒருமைப்பாடு (5) ஆழ்பரிவு

**12.** நோக்கம், பொறுப்புக்கூறல், நல்லிணக்கம் முதலான கருத்துக்களோடு ஒப்பிட்டு நோக்குமிடத்து மிகவும் பொறுப்புடன் கூடிய தொடர்பாடல் வகை எது?
(1) குழுத் தொடர்பாடல் (2) ஆளுள் தொடர்பாடல் (3) ஆட்களிடைத் தொடர்பாடல்
(4) வெகுசனத் தொடர்பாடல் (5) பொதுசனத் தொடர்பாடல்

**13.** தொடர்பாடல் களம் சந்தை நிலைமைகளுக்கு ஏற்ப உருவாக்கப்பட வேண்டியதாகும் எனும் கருத்து முதன்முதலில் அழுத்தமாகக் கூறப்பட்டது
(1) அதிகாரவாதத் தொடர்பாடல் எண்ணக்கரு மூலமாகும்.
(2) தாராண்மைவாதத் தொடர்பாடல் எண்ணக்கரு மூலமாகும்.
(3) சமூக ஜனநாயகமாக்கல் தொடர்பாடல் எண்ணக்கரு மூலமாகும்.
(4) சோவியத் சமவுடைமை தொடர்பாடல் எண்ணக்கரு மூலமாகும்.
(5) சமூகப் பொறுப்பு தொடர்பான தொடர்பாடல் எண்ணக்கரு மூலமாகும்.

**14.** தொடர்பாடல் எனும் எண்ணக்கருவின் அடிப்படை அர்த்தமாவது
(1) தகவல் பரிமாற்றம்
(2) செய்திகளை எடுத்துச் செல்லல்
(3) தனிப்பட்ட இடைத்தொடர்பு
(4) ஒரு விடயத்தை இன்னுமொருவருக்கு அறியப்படுத்துதல்
(5) தனித்திருக்கும் பகுதியினர் மத்தியில் தொடர்பினை ஏற்படுத்துதல்

**15.** நாட்டார் நம்பிக்கைகள் பற்றிய ஆய்வு தொடர்பில் பின்வரும் கூற்றுக்களில் **தவறானது,**
(1) சமூக யதார்த்தத்துடன் இணைந்திருத்தல்
(2) சமூக நிலைபேறிற்கு அவசியமானது எனக் கருதப்படுதல்
(3) மதங்களிலிருந்து விலகி நிலைத்திருக்காமை
(4) கீழைத்தேய நாடுகளில் பரவலாகக் காணப்படுதல்
(5) விசுவாசங்களிலிருந்து விடுபடாதிருத்தல்

**16.** இலங்கையிலுள்ள நாடோடி மக்கள் இலங்கையின் பண்பாட்டுப் பாரம்பரியங்களை உள்வாங்கியுள்ளமையைக் காணக்கூடியதாயுள்ளது. இது
(1) பண்பாட்டுப் பரவுகையாகும். (2) பண்பாட்டு ஆர்முடுகலாகும். (3) பண்பாட்டு அதிர்வாகும்.
(4) பண்பாட்டுத் தேக்கமாகும். (5) துணைப் பண்பாட்டாக்கமாகும்.

**17.** அபிவிருத்திச் செய்திகளை முன்னெடுத்துச் செல்லும் பணியின் பண்பு **அல்லாதது**
(1) நிபுணத்துவ நெறிப்படுத்தல் தேவைப்படுதல்
(2) திட்டம் பற்றிய அனைத்து விடயங்கள் பற்றியும் விளக்கம் கொண்டிருத்தல்
(3) நேர வரையறை ஒன்று இன்றிச் செயற்படுதல்
(4) பெறுநர்களின் எதிர்வினைகளைப் பெறுவதற்காகப் பணியாற்றுதல்
(5) மதிப்பீட்டிற்கான வேலைத்திட்டமொன்று காணப்படுதல்

**18.** "உங்களது கூற்றின் கட்டமைப்பு அம்சங்கள் கற்றுத்தேர்ந்த மக்களுக்கு வெளிப்படையாகத் தெரியக்கூடியதாயிருக்கும்."
மேற்குறித்த வாக்கியம் ஆசிரியர் ஒருவரால் ஐந்தாம் தர மாணவர்களுக்கு வழங்கப்பட்டிருந்தது. தொடர்பாடல் பாடப்பரப்பின்படி, இது இனங்காணத்தக்கதாய் இருப்பது,
(1) ஆழமான வாக்கியம் என்றாகும். (2) வசன அமைப்பு சார்ந்த தவறு என்றாகும்.
(3) கருத்துத் தடை என்றாகும். (4) கல்விசார் கூற்று என்றாகும்.
(5) அனுபவக் களத்தின் தவறொன்று என்றாகும்.

**19.** நாட்டாரியல், நூல்களிலன்றி வாய்மொழி வழக்காறு வழியாகவே பேணப்படுகிறது என்பதைத் தெளிவாகச் சுட்டிக்காட்டிய முதலாவது இலங்கை அறிஞர்
(1) மார்ட்டின் விக்கிரமசிங்க (2) ஆனந்த குமாரசுவாமி (3) நந்தசேன ரத்னபால
(4) ரல்ப் பீரிஸ் (5) கார்த்திகேசு சிவத்தம்பி

**20.** ஊடக விளங்கறிவினூடாக அடிப்படையில் விருத்தி செய்ய முயற்சிக்கப்படுவது யாது?
(1) செய்தி விமர்சனத்திறன்
(2) செய்தி உருவாக்கும் திறன்
(3) செய்திகளை மதிப்பிடும் திறன்
(4) செய்திகளை உள்வாங்கும் திறன்
(5) செய்திகளை பொருட்கோடல் செய்யும் திறன்

**21.** பின்வரும் கூற்றுகளைக் கருத்திற்கொள்க.
A - அபிவிருத்தியின் அடிப்படைகளாக வெகுசன ஊடகங்கள் அமைந்திருப்பதால் அவை திட்டமிடப்பட்டுப் பயன்படுத்தப்பட வேண்டும்.
B - சமூகத்தின் ஒவ்வொரு வரலாற்று மாற்றமும் வர்க்கப் போராட்டத்தின் செல்வாக்கிற்கு உட்பட்டதாகும்.
C - கைத்தொழில் வளர்ச்சியுடன் தொழிலாற்றும் பணியாளர் வர்க்கம் தோற்றம் பெற்றது.
D - புதிய வர்த்தக வர்க்கம் விவசாயிகளையும் தொழிலாளர்களையும் ஒடுக்குகிறது.
மேற்குறித்த கூற்றுகளுள் சமூக ஆய்விற்கான மாக்சிச அணுகுமுறையின்படி சரியானதாக அமைவன,
(1) A யும் B யும் மாத்திரம் (2) B யும் C யும் மாத்திரம் (3) C யும் D யும் மாத்திரம்
(4) A, B, C ஆகியன மாத்திரம் (5) B, C, D ஆகியன மாத்திரம்

**22.** பலநோக்குக் கூட்டுறவுச் சங்க அமைப்பில் உள்ள 'பலநோக்கு' என்பதில் உள்ளடங்குவன,
(1) பங்கீட்டுப் பொருட்களை வழங்குதல், நிவாரணம் வழங்குதல், உற்பத்தி மேற்கொள்ளல், பொருட்களை விற்பனை செய்தல் ஆகியனவாகும்.
(2) திட்டமிடல், பணிகள் பங்கீடு, பணியாற்றுதல், வழிப்படுத்துதல் ஆகியனவாகும்.
(3) பொருள், விலை, இடம், மேம்படுத்துதல் ஆகியனவாகும்.
(4) உற்பத்தி, மேம்படுத்துதல், பிரசித்தப்படுத்தல், சந்தைப்படுத்தல் ஆகியனவாகும்.
(5) உற்பத்தி, சந்தைப்படுத்தல், விநியோகித்தல், கொள்வனவு செய்தல் ஆகியனவாகும்.

**23.** ஒரு செய்தியைப் படைப்பாக்க ரீதியில் முன்வைக்கும்போது கருத்திற்கொள்ள வேண்டிய முக்கிய அம்சம் **அல்லாதது,**
(1) பெறுநரால் இலகுவில் உள்வாங்கக் கூடியதாயிருத்தல்
(2) பெறுநரிடம் உள்ளக்கிளர்ச்சியை உருவாக்கக் கூடியதாயிருத்தல்
(3) பெறுநருக்குப் பரீட்சயமான மாதிரியொன்றைப் பயன்படுத்தல்
(4) பெறுநருக்கு மகிழ்ச்சியையும் வாழ்க்கை பற்றிய விளக்கத்தையும் வழங்குதல்
(5) பெறுநரின் விளங்கறிவுத் திறனுடன் பொருந்தக்கூடியதாயிருத்தல்

**24.** படைப்பாளி ஒருவருக்குத் தனது சுய அடையாளத்தை நிலைநிறுத்துவதற்கு மிகவும் இலகுவானதாக அமைவது
(1) கவிதை வாசித்தலிலாகும்.
(2) ஓவியம் வரைதலிலாகும்.
(3) திரைப்படம் தயாரித்தலிலாகும்.
(4) மேடை நாடகத்திலாகும்.
(5) தொலைக்காட்சித் தொடர் நாடகங்களிலாகும்.

**25.** தாராண்மைவாதத் தொடர்பாடல் பற்றிய அடிப்படை எண்ணக்கருவை விருத்தி செய்வதற்குப் பங்காற்றிய மெய்யியலாளர்களை மாத்திரம் கொண்ட தொகுதியைத் தெரிவுசெய்க.
(1) ஜோன் பென்தம், ஜோன் லொக், ஜோன் மில்டன், ஜோன் ஸ்டுவர்ட் மில்
(2) ஜோன் மில்டன், ஜோன் ஸ்டுவர்ட் மில், நிகோலோய் மாக்கியவெல்லி, கார்ள் மார்க்ஸ்
(3) நிகோலோய் மாக்கியவெல்லி, ஜோன் லொக், ஜோன் மில்டன், தோமஸ் ஹோப்ஸ்
(4) ஜோன் லொக், ஜோன் மில்டன், ஜோன் ஸ்டுவர்ட் மில், ஃப்ரெட்ரிக் ஹெகல்
(5) தோமஸ் ஹோப்ஸ், அடம் ஸ்மித், ஃப்ரெட்ரிக் ஹெகல், ஜோர்ஜ் கெப்னர்

**26.** **தவறான** கூற்றைத் தெரிவுசெய்க.
(1) உள அழுத்தம் ஆளுள் தொடர்பாடலின் இயல்பாகும்.
(2) நண்பர்களின் இழப்பின் காரணமாக சோர்வு உருவாகலாம்.
(3) தானும் மற்றவரும் சரியெனச் சிந்திப்பது துருவமயப்படுத்தல் என இனங்காணப்படும்.
(4) அதிகளவில் உண்ணும் பழக்கம் பதகளிப்பின் ஓர் இயல்பாகும்.
(5) தமக்குரிய பணியின் இலக்குகளைப் பூரணப்படுத்த முடியாமல் இருப்பதனால் பதற்றம் தோன்றலாம்.

**27.** மொழிப் பாவனையுடன் தொடர்புடைய சில கூற்றுக்கள் பின்வருமாறு;
A - சுய வெளிப்பாட்டை முன்வைக்கும் ஆற்றல்
B - தனியாட்களை மையப்படுத்திய செயற்பாடு
C - தனிப்பட்ட நோக்குநிலை அவசியமாயிருத்தல்
மேற்படி கூற்றுக்களுக்கேற்றவாறு மொழிப் பாவனை வகைகளை ஒழுங்குமுறையில் எடுத்துக்காட்டும் தெரிவு யாது?
(1) பேச்சு, விவரணம், பிரதி எழுத்து
(2) ஆற்றுகை, பிரதி எழுத்து, விவரணம்
(3) உரை, ஆற்றுகை, பேச்சு
(4) பேச்சு, ஆற்றுகை, விவரணம்
(5) பிரதி எழுத்து, பேச்சு, உரை

**28.** உலகின் வேறுபட்ட இனக்குழுக்களதும் தேசங்களினதும் ஆன்மீகப் பண்பாட்டிற்கு மாத்திரம் உரிய விடயங்களை உள்ளடக்கிய தெரிவு யாது?
(1) மதம், கலை, புராணங்கள், அரசியல்
(2) பொருளாதாரம், தொழினுட்பம், விஞ்ஞானம், கலை
(3) கலை, மதம், மெய்யியல், புராணங்கள்
(4) மெய்யியல், தொல்பொருளியல், கலை, மதம்
(5) பொருளாதாரம், தொல்பொருளியல், புராணங்கள், விஞ்ஞானம்

**29.** உலகமயமாதல் செயன்முறையின் ஒரு முன்நிபந்தனையாக அமைவது
(1) தொழினுட்பச் செயன்முறையை நிராகரித்தல்
(2) குடும்பம், தேசிய விழுமியங்களுக்கு முன்னுரிமை வழங்குதல்
(3) மூடப்பட்ட இனத்துவம்
(4) மீதேசிய நிறுவனங்களின் உருவாக்கம்
(5) தொடர்பாடல் செயன்முறையின் விரிவாக்கம்

**30.** மொழிப் பண்பாட்டில் **உள்ளடங்காதது**
(1) கொண்டாட்ட நிகழ்வுகளுடன் தொடர்புடைய செயற்பாடுகள்
(2) மெய்யியல் அடிப்படையிலான படைப்புக்களும் ஒப்பித்தல்களும் உருவாகுதல்
(3) மனிதனுடன் தொடர்புடைய வெளிவாரியான இயற்கைப் பொருட்கள்
(4) மனிதனின் சமூகப் பழக்கவழக்கங்களுடன் தொடர்புடைய செயற்பாடுகள்
(5) தனக்குத் தானே பேசிக் கொள்வதுடன் தொடர்புடைய தொடர்பாடல் செயற்பாடுகள்

**31.** பொலிஸ் - பொதுசன உறவு, குற்றத்தடுப்புப் பணியகத்துடன் தொடர்புடைய பணிகள் பற்றிய கருத்துக்கள் சில கீழே தரப்பட்டுள்ளன.

A - பாடசாலை மாணவர்களுக்கு விழிப்புணர்வூட்டக்கூடிய விரிவுரைகளை நடாத்துதல்
B - சமய விழாக்களில் பொதுமக்களுக்கு உதவுதல்
C - குற்றவாளிகளுக்குத் தண்டனைகளைப் பெற்றுக்கொடுத்தல்
D - வெகுசன ஊடகங்களுக்கான நிகழ்ச்சிகளை ஒழுங்கு செய்தல்

மேற்குறித்தவற்றில் இவற்றுக்கு மிகப் பொருத்தமான பணிகளாக அமைவன

(1) A யும் B யுமாகும். (2) B யும் C யுமாகும். (3) C யும் D யுமாகும்.
(4) A, B, D ஆகியனவாகும். (5) B, C, D ஆகியனவாகும்.

**32.** சமூகத்தினால் தொடர்பாடலிலும் தொடர்பாடலால் சமூகத்திலும் பரஸ்பர அடிப்படையில் செல்வாக்குச் செலுத்தும் பிரதான காரணி எது?

(1) அரசியல் சார்ந்த காரணி (2) சூழல் சார்ந்த காரணி
(3) படைப்பாக்கம் சார்ந்த காரணி (4) பொருளாதாரம் சார்ந்த காரணி
(5) தொழினுட்பம் சார்ந்த காரணி

**33.** ஊடகங்கள் வழியாக வன்முறைகள் நிறைந்த நிகழ்ச்சிகள் முன்வைக்கப்படுவதால் ஏற்படும் சமூகத் தாக்கங்கள் பற்றி வகுப்பறையில் மாணவர்கள் மத்தியில் கலந்துரையாடல் ஒன்று நடைபெற்றது.

ரஹீம் :- அவ்வாறான நிகழ்ச்சிகளைப் பார்ப்பது சிலருக்கு விருப்பம்.
ராமன் :- மாணவர்களின் வாழ்க்கையில் தீவிரமாகச் செல்வாக்குச் செலுத்தலாம்.
கமலி :- சில நேரங்களில் வன்முறை குறைவடையலாம்.
ரமணி :- குடும்பங்கள் மத்தியில் விரும்பத்தகாத பிரச்சினைகளும் உருவாகலாம்.

இச் சிந்தனைகளில் ஏற்றுக்கொள்ளத்தக்க சிந்தனைகளை முன்வைத்தவர்கள்

(1) ரஹீம், ராமன், கமலி ஆகியோர் மாத்திரமாவர்
(2) ராமன், கமலி, ரமணி ஆகியோர் மாத்திரமாவர்
(3) ரஹீம், கமலி, ரமணி ஆகியோர் மாத்திரமாவர்.
(4) ரஹீம், ராமன், ரமணி ஆகியோர் மாத்திரமாவர்.
(5) ரஹீம், ராமன், கமலி, ரமணி ஆகிய அனைவருமாகும்.

**34.** ஊடக விளம்பரப்படுத்தல் பற்றிய விவாதமொன்றில் எடுத்துரைக்கப்பட்ட விடயங்களுக்கேற்ப அது,

A - ஒரு சமூகத் தேவையாகும்.
B - சமூகத்திற்கு நல்ல விடயமொன்றை வழங்கும்.
C - சமூகத்திற்குத் தீங்கான விடயமொன்றை வழங்கும்.
D - சமூக அபிப்பிராயங்களை மாற்றும்.

மேற்குறித்த கூற்றுக்களில்,

(1) A, B, C ஆகியன மாத்திரம் சரியானவை.
(2) A, B, D ஆகியன மாத்திரம் சரியானவை.
(3) A, C, D ஆகியன மாத்திரம் சரியானவை.
(4) B, C, D ஆகியன மாத்திரம் சரியானவை.
(5) A, B, C, D ஆகிய அனைத்தும் சரியானவை.

**35.** "ஒருவன் தான் விரும்பிய விடயங்களை வெளிப்படுத்த இயலாத இடத்தில் அவனுக்கு எதுவும் சொந்தமாகாது." கிரேக்க மெய்யியலாளரான பிளேட்டோவின் (Plato) இக்கூற்று குறிப்பிடுவது,

(1) இணக்கமின்மையின் பெறுமதியையாகும்.
(2) சுயாதீனக் கருத்தியலின் முக்கியத்துவத்தையாகும்.
(3) சகோதரத்துவத்தின் அவசியத்தையாகும்.
(4) ஆழ்பரிவின் குணாதிசயத்தையாகும்.
(5) இன நல்லிணக்கத்தையாகும்.

**36.** யாதேனுமொரு மொழி இறந்த மொழியாக மாறுவதால் ஏற்படக்கூடிய தீவிரமான நிலைமைகள் பற்றிய சில கருத்துக்கள் கீழே தரப்பட்டுள்ளன.

A - குறித்த மக்கள் தமது கருத்துக்களைத் தொடர்பாடல் செய்யக்கூடிய சந்தர்ப்பங்களை இழப்பர்
B - குறித்த மக்களது பண்பாட்டு அடையாளத்தைத் தக்க வைக்கும் ஆற்றல் வீழ்ச்சியடைதல்
C - குறித்த மொழியில் உள்ளடங்கியிருக்கும் அறிவு மறைந்து போதல்
D - குறித்த மக்களுக்கு ஒரு தேசமாக அல்லது ஒரு இனக் குழுவாக முன்பிருந்த வரவேற்பு மறைந்து போதல்

மேற்குறித்த கூற்றுக்களில் சரியானவை

(1) A, B , C ஆகியன மாத்திரம் (2) A, B, D ஆகியன மாத்திரம்
(3) A, C, D ஆகியன மாத்திரம் (4) B, C, D ஆகியன மாத்திரம்
(5) A, B, C, D ஆகிய அனைத்தும்.

**37.** மனித நல்லொழுக்கங்களை கருவாகக் கொண்டு தயாரிக்கப்பட்ட திரைப்படம் பற்றிய திறனாய்வுக் கட்டுரைகள் பல செய்திப் பத்திரிகைகளிலும் சஞ்சிகைகளிலும் பிரசுரிக்கப்பட்டன. ஒரு செய்திப் பத்திரிகையில் பிரசுரிக்கப்பட்ட கட்டுரையானது திரைப்படம் பற்றிய கலைத்துவ அம்சங்கள், உள்ளார்ந்த இயல்புகள் ஆகியன தொடர்பிலான திறனாய்வை உள்ளடக்கியிருந்தது. இங்கு விமர்சகர் பயன்படுத்திய விமர்சனமுறை யாது?
(1) அழகியல்சார் விமர்சனம் (2) அறநெறிசார் விமர்சனம் (3) அரசியல்சார் விமர்சனம்
(4) ஒப்பீட்டு விமர்சனம் (5) மொழியியல்சார் விமர்சனம்

- **38** தொடக்கம் **40** வரையான வினாக்களுக்குக் கீழே தரப்பட்டுள்ள அட்டவணையை அடிப்படையாகக் கொண்டு விடை எழுதுக.

| | | | |
|---|---|---|---|
| A | அறியும் ஆற்றல் | G | சக்கரம் |
| B | புத்தாக்கப் பரவுகை | H | சேரிகள் |
| C | மந்த போஷாக்கு | I | பிரஜைகளை வலுப்படுத்தல் |
| D | எண்ணிமமாக்குதல் | J | சுய இராஜ்யம் |
| E | அலட்சியம் | K | தொழிலின்மை |
| F | தன்னம்பிக்கை | L | ஆட்களுக்கிடையிலான நம்பிக்கை |

**38.** மேற்படி அட்டவணையில், போல். பீ. ஸ்டீவனின் வரைவிலக்கணத்தில் உள்ளடங்கும் அம்சங்களாக அமைவன,
(1) A, C, D, J. (2) C, E, H, K. (3) C, H, E, L.
(4) C, K, E, G. (5) E, D, B, H.

**39.** நாயர் வைட் ஆகியோர் முன்வைத்த அபிவிருத்தித் தொடர்பாடல் மாதிரிக்குரிய எண்ணக்கருக்களுடன் தொடர்பானவை
(1) B, F, D. (2) D, I, L. (3) F, I, L.
(4) I, J, F. (5) L, G, A.

**40.** அபிவிருத்தி தொடர்பான சீன மாதிரி, மகாத்மாகாந்தி பயன்படுத்திய தொடர்பாடல் ஆகியவற்றுடன் தொடர்புடைய குழுக்கள் முறையே
(1) AB, GI. (2) AD, GJ. (3) AF, GK.
(4) BD, GJ. (5) CD, JL.

**41.** திரைப்படமொன்றின் தொடர்காட்சிகளில் முதலாவது காட்சியாக நபரொருவர் இறக்கும் காட்சி காண்பிக்கப்பட்டது. தொடர்ந்து, ஆற்றுப்படுக்கை ஒன்றின் மீதாகத் தொடர்ச்சியாகப் பறக்கும் பறவைகளின் காட்சியொன்று அடுத்ததாக இணைக்கப்பட்டிருந்தது. அந்தக் காட்சிகளைப் பார்த்த பாலன் அந்தக் காட்சிச் செயற்பாடு பற்றித் தன்னால் எதனையும் புரிந்துகொள்ள முடியாதிருந்ததாகத் தெரிவித்தார். பாலன் முன்வைத்த இந்தக் கருத்திற்குக் காரணமாக அமையக்கூடியது
(1) பாலனால் திரைப்படக் குறியீடுகளின் அர்த்தத்தைச் சரியாகப் புரிந்துகொள்ள இயலாதிருந்தமை
(2) பாலனிடம் திரைப்பட ஊடகப் பண்பாடு பற்றிய சரியான புரிந்துணர்வு இல்லாதிருந்தமை
(3) பாலன் அமர்ந்திருந்த இடத்திலிருந்து திரைப்படத்தைச் சரியாகப் பார்வையிட இயலாதிருந்தமை
(4) பாலன் எழுத்தறிவைக் கொண்டிராதிருந்தமை
(5) திரைப்படத்தின் காணொளிகள் பாலனுக்குத் தெளிவற்றதாக இருந்தமை

**42.** பின்வரும் கூற்றுக்களில் ஊடகக் கைத்தொழில் தொடர்பான **தவறான** கூற்று எது?
(1) மிகவும் ஒழுங்கமைக்கப்பட்ட கட்டமைப்பினுள் செயற்படுதல்
(2) சந்தைத் தேவைகளுக்கு முன்னுரிமை அளிக்கும் வகையில் செயற்படுதல்
(3) செய்தியொன்று பல பகுதியினரது பங்களிப்புடன் உருவாக்கப்படுதல்
(4) ஊடக நிறுவனங்களுக்கிடையே போட்டித்தன்மை காணப்படுதல்
(5) அனைத்துச் சந்தர்ப்பங்களிலும சமூக உளநிலைப்பாட்டைச் சந்தை மேலாதிக்கத்திலிருந்து விடுவித்தல்.

**43.** செய்திப் பத்திரிகையொன்றின் பதிப்பாசிரியருக்குக் கிடைத்த கையெழுத்துப் பிரதியொன்றில் எழுத்துப் பிழைகளும் இலக்கணத் தவறுகளும் கொண்ட சில வாக்கியங்கள் காணப்பட்டன. அதில் காணப்பட்ட சரியான வாக்கியம் எது?
(1) பட்டமளிப்பு விழாவில் அவன் பங்குபற்றியிருந்தார்.
(2) தந்தை, தாய், மகன் கோயிலை நெருங்கியிருக்கக் காணப்பட்டது.
(3) இன்றைய காலனிலை அற்புதமானது.
(4) பண்மைத்துவம் மக்களிடையே காணப்படவில்லை.
(5) பிச்சைக்காரர்கள் பலர் புகைவண்டி நிலையத்தில் குழுமியிருந்தனர்.

**44.** பின்வரும் கூற்றுக்களைக் கருதுக.
A - நீங்கள் கூறுவது தெளிவாகவுள்ளது.
B - எனக்குத் தெரிந்த மொழியில்தான் சொல்கிறேன்.
C - அக்காரணம் மிகவும் பெறுமதியான ஒன்று.
D - ஏனைய நபர்களது ஒத்துழைப்புடன் அதை நாம் ஆரம்பிப்போம்.
மேற்குறித்த கூற்றுக்களுக்குப் பொருந்தும் செவிமடுத்தல் செயற்பாட்டின் சந்தர்ப்பங்களை ஒழுங்குமுறையில் கொண்ட தொகுதியைத் தெரிவுசெய்க.
(1) விளங்கிக்கொள்ளுதல், செவிமடுத்தல், மதிப்பிடுதல், எதிர்வினையாற்றுதல்
(2) செவிமடுத்தல், விளங்கிக்கொள்ளுதல், எதிர்வினையாற்றுதல், மதிப்பிடுதல்
(3) விளங்கிக்கொள்ளுதல், எதிர்வினையாற்றுதல், மதிப்பிடுதல், செவிமடுத்தல்
(4) செவிமடுத்தல், மதிப்பிடுதல், விளங்கிக்கொள்ளுதல், எதிர்வினையாற்றுதல்
(5) செவிமடுத்தல், விளங்கிக்கொள்ளுதல், மதிப்பிடுதல், எதிர்வினையாற்றுதல்

**45.** பின்வரும் கூற்றுக்களில் **தவறான** கூற்றைத் தெரிவுசெய்க.
(1) வாய்மொழி மூலத் தொடர்பாடல் பெரும்பாலான சந்தர்ப்பங்களில் வாய்மொழியல்லாத குறியீடுகளுடன் இணைந்தே நிகழும்.
(2) அதிசயித்தலும் மகிழ்வடைதலும் படைப்பாக்க ரீதியிலான தொடர்பாடலின் விசேட இயல்புகளாகும்.
(3) சமூகத்தின் அதிகாரமைய இயல்பு தொடர்பாடல் செயற்பாட்டில் தாக்கம் செலுத்தாது.
(4) வறுமைப் பண்பாட்டிலிருந்து சமூகத்தை விடுவிப்பது அபிவிருத்தித் தொடர்பாடலின் ஒரு சவாலாகும்.
(5) சுதேச அறிவு தொகுக்கப்பட்டுள்ள வலுவான தொடர்பாடல் முறையாக சடங்குகளையும் சம்பிரதாயங்களையும் குறிப்பிடலாம்.

**46.** வேறுபிரித்தல் அல்லது பிரிவு அவசியமான ஆளுள் தனிநபர் தொடர்பாடல் செயற்பாடாகக் கருத்திற் கொள்ளக்கூடியதாக இருப்பது
(1) ஐம்புலன் உணர்வுகளுக்கும் அவதானத்தைச் செலுத்துவதாலாகும்.
(2) ஆழ்பரிவைப் பெற்றுக்கொள்வதாலாகும்.
(3) ஐம்புலனுணர்வுகளையும் தனித்தனியாக இனங்காண்பதற்காகும்.
(4) வினைத்திறன்மிக்க புலக்காட்சிக்காகவாகும்.
(5) எண்ணக்கருக்களை விசேடமான முறையில் கட்டியெழுப்புவதற்காகவாகும்.

**47.** பாரம்பரியச் சமூகத்தில் பல்லக்கில் பயணித்தல் முதல் நவீன சமூகத்தில் மகிழூந்தில் பயணித்தல் வரை நடைபெற்ற சமூக மாற்றம்
(1) பண்பாட்டு அதிர்வு ஆகும்.
(2) பண்பாட்டுப் பரவுகை ஆகும்.
(3) பண்பாட்டுத் தேக்கமாகும்.
(4) பண்பாட்டு ஆர்முடுகல் ஆகும்.
(5) பண்பாட்டுத் தேய்வாகும்.

**48.** சுதேச அறிவுத் தொகுதியை நினைவுபடுத்துவதற்காகவும் பரவலாகப் பேணிப் பாதுகாப்பதற்காகவும் முற்கால அறிஞர்களால் பரவலாகப் பயன்படுத்தப்பட்ட வழிமுறை,
(1) படைப்பாக்க ரீதியிலான வெளியீடுகளாக மாற்றுதல்
(2) மனச்சித்திரங்களாக உருவகித்துக்கொள்ளல்
(3) சாராம்சப்படுத்தி நினைவில் வைத்துக் கொள்ளல்
(4) அத்தியாயங்களாக்கி நூல்களை உருவாக்குதல்
(5) தர்க்க வடிவமைப்பு ரீதியில் ஒழுங்குபடுத்திக்கொள்ளல்

**49.** தனது கோரிக்கைகளை நிறைவேற்றிக் கொள்வதற்காக நீண்டகாலமாக அவற்றை முன்வைத்து அவை தோல்வியடைந்த நபரொருவர் அதற்கு எதிர்ப்புத் தெரிவிக்கும் முகமாகப் பகிரங்கமாகப் பொதுக் கட்டடமொன்றின் கூரையில் ஏறிச் சாகும்வரை உண்ணாவிரத முயற்சியில் ஈடுபடுவது தொலைக்காட்சி ஊடகவியலாளர் ஒருவருக்கு அறியக் கிடைத்தது. சமூகத்துடன் நட்புறவான செய்திகளைச் சேகரித்தல் தமது பொறுப்பாகக் கொண்ட ஓர் ஊடகவியலாளராக அவர் இங்கு செய்திருக்க வேண்டியது யாது?

(1) குறித்த நபர் பற்றிப் பொலிசாருக்கு அறிவித்து சம்பவத்திற்கு முன்னர் அவரைக் கைது செய்ய நடவடிக்கை எடுத்தல்

(2) சாகும்வரை உண்ணாவிரதத்தில் ஈடுபடும் முயற்சியைத் தடுப்பதுடன் அதேவேளை அவரது கோரிக்கைளை ஊடகம் வழியாக வெளிப்படுத்தச் செய்தல்

(3) சம்பவங்களுக்கு உயர் முன்னுரிமையை வழங்கி அதனை உடனடிச் செய்தியாக ஊடகத்திற்கு அனுப்ப நினைத்தல்.

(4) தந்திரோபாயமாக ஏனைய ஊடக நிறுவனங்களின் செய்தியாளர்களைத் தடுப்பதுடன் அறிக்கையிடலின் தலைமையாளராகத் தான் உருவாவதற்கு நடவடிக்கையெடுத்தல்.

(5) அதிகாரிகள் இழைத்த தவறுகளைச் சுட்டிக்காட்டுவதற்காக சாகும்வரை உண்ணாவிரதத்தில் ஈடுபட முயற்சித்த நபரின் கருத்துக்களை காணொளிக் காட்சியாக உருவாக்க முயற்சித்தல்

**50.** ஊடகம், பூகோளமயமாதல் ஆகியன பற்றிப் பாடசாலை ஊடகக் கழகத்தினால் நடாத்தப்பட்ட கலந்துரையாடலில் உயர்தர மாணவர்கள் சிலர் முன்வைத்த கூற்றுக்கள் சில கீழே தரப்பட்டுள்ளன.

மதுஷி :- பூகோளமயமாதலின் பரவலுக்கு ஊடகம் துணைபுரிந்தது.

ரேணுகா :- வர்த்தகக் கைத்தொழிலின் சமகாலத் தேவையாக ஊடகப் பண்பாட்டை அறிமுகம் செய்யலாம்.

மேனகா :- வெகுசன ஊடகப் பண்பாட்டில் மூழ்கிப் போயுள்ள மக்கள் அதன் தாக்கம் பற்றிய விழிப்புணர்வைக் கொண்டிருக்கமாட்டார்கள்.

பிரபோதினி :- தொழில்சார் ஊடகத்துறை அதன் சந்தை விரிவாக்கத்திற்காகப் பாரம்பரியச் சிந்தனைகளைப் பயன்படுத்துவதில்லை.

மேற்குறித்த கூற்றுக்களுள்,

(1) மதுஷி, ரேணுகா, மேனகா ஆகியோரின் கூற்றுகள் மாத்திரம் சரியானவை.
(2) ரேணுகா, மேனகா, பிரபோதினி ஆகியோரின் கூற்றுகள் மாத்திரம் சரியானவை.
(3) மதுஷி, மேனகா, பிரபோதினி ஆகியோரின் கூற்றுகள் மாத்திரம் சரியானவை.
(4) மதுஷி, ரேணுகா, பிரபோதினி ஆகியோரின் கூற்றுகள் மாத்திரம் சரியானவை.
(5) மதுஷி, ரேணுகா, மேனகா, பிரபோதினி ஆகிய அனைவரின் கூற்றுக்களும் சரியானவை.

* * *

ශ්‍රී ලංකා විභාග දෙපාර්තමේන්තුව
இலங்கைப் பரீட்சைத் திணைக்களம்

## අ.පො.ස. (උ.පෙළ) විභාගය/ க.பொ.த. (உயர் தர)ப் பரீட்சை - 2019

## නව/පැරණි புதிய / பழைய பாடத்திட்டம்

| විෂය අංකය பாட இலக்கம் | 29 | විෂයය பாடம் | தொடர்பாடலும் ஊடகக்கற்கையும் |
|---|---|---|---|

## ලකුණු දීමේ පටිපාටිය/புள்ளி வழங்கும் திட்டம்

### I පත්‍රය/பத்திரம் I

| ප්‍රශ්න අංකය வினா இல. | පිළිතුරු අංකය விடை இல. | ප්‍රශ්න අංකය வினா இல. | පිළිතුරු අංකය விடை இல. | ප්‍රශ්න අංකය வினா இல. | පිළිතුරු අංකය விடை இல. | ප්‍රශ්න අංකය வினா இல. | පිළිතුරු අංකය விடை இல. | ප්‍රශ්න අංකය வினா இல. | පිළිතුරු අංකය விடை இல. |
|---|---|---|---|---|---|---|---|---|---|
| 01. | 04 | 11. | 02 | 21. | 05 | 31. | 04 | 41. | 01 |
| 02. | 01 | 12. | 01 | 22. | 05 | 32. | 03 | 42. | 05 |
| 03. | 03 | 13. | 02 | 23. | 04 | 33. | 05 | 43. | 05 |
| 04. | 04 | 14. | 05 | 24. | 02 | 34. | 05 | 44. | 05 |
| 05. | 01 | 15. | 03 | 25. | 01 | 35. | 02 | 45. | 03 |
| 06. | 02 | 16. | 01 | 26. | 03 | 36. | 04 | 46. | 05 |
| 07. | 04 | 17. | 03 | 27. | 04 | 37. | 01 | 47. | 04 |
| 08. | 03 | 18. | 03 | 28. | 03 | 38. | 02 | 48. | 01 |
| 09. | 04 | 19. | 02 | 29. | 04 | 39. | 03 | 49. | 02 |
| 10. | 05 | 20. | 04 | 30. | 03 | 40. | 02 | 50. | 01 |

✪ විශේෂ උපදෙස්/ விசேட அறிவுறுத்தல் :

එක් පිළිතුරකට/ ஒரு சரியான விடைக்கு 02 ලකුණු බැගින්/புள்ளி வீதம்

මුළු ලකුණු/மொத்தப் புள்ளிகள் 2 X 50 = 100

# தொடர்பாடலும் ஊடகக் கற்கையும்

## 29 - பகுதி II

**1.** தொடர்பாடல் பாடத்துறையின் சிக்கல்தன்மையானது தொடர்பாடல் மாதிரிகளின் ஊடாகத் தெளிவுபடுத்தப்படுகின்றது.

(i) ஆரம்பகாலத் தொடர்பாடல் மாதிரிகளில் **காணக்கிடைக்காததும்** ஹரோல்ட் டீ லாஸ்வெல் மாதிரியில் காணத்தக்கதுமான விசேட அடிப்படை ஆக்கக்கூறைப் பெயரிட்டு, அதுபற்றிச் சுருக்கமாக விளக்குக.

தாக்கம்.

தொடர்பாடுநரால் பெறுநரிடத்தில் எதிர்பார்க்கப்படுகின்ற மனப்பாங்கு, நடத்தைசார் மாற்றம்.

**பெயரிட்டிருந்தால் -01 புள்ளி**

**விளக்கியிருந்தால் -01 புள்ளி**

**மொத்தப் புள்ளிகள் -02 புள்ளிகள்**

(ii) ஒஸ்குட், ஷ்ராம் ஆகியோரால் முன்வைக்கப்பட்ட மாதிரியின் அடிப்படையில் குறிமுறையவிழ்ப்பினை குறிமுறையாக்கமாக மாற்றுவதற்கு ஏதுவாகும் காரணியைப் பெயரிட்டு, அதன் முக்கியத்துவத்தை விளக்குக.

பொருட்கோடல் / வழிமாற்றம்.

- தகவல் ஒன்றில் காணப்படும் கருத்துக்களைச் சரியாக விளங்கிக் கொள்வதற்கு , உள்வாங்கிக் கொள்வதற்கு பொருட்கோடல் அவசியமான காரணியாகும்.
- தொடர்பாடல் செயன்முறை தொடர்ச்சியாக நிகழ்வதற்கு பொருட்கோடல் அவசியமான காரணியாகும்.
- பெறுநர் தொடர்பாடுநராக வகிபாகம் ஏற்க பொருட்கோடல் அவசியமான காரணியாகும்.
- தொடர்பாடுநர் மற்றும் பெறுநரிடத்தில் பொதுவான மனநிலை உருவாகுவதற்கு பொருட்கோடல் அவசியமான காரணியாகும்.

**பெயரிட்டிருந்தால் - 2 புள்ளிகள்**

**விளக்கியிருந்தால் - 2 புள்ளிகள்**

**மொத்தப் புள்ளிகள் -4 புள்ளிகள்**

(iii) இருபடிநிலைத் தொடர்பாடல் மாதிரியின்படி தகவல் பரவும் விதத்தினை வரைபடம் ஒன்றின் ஊடாக விளக்குக.




Source : Katz & Lazarsfeld (1955)

**படம் வரைந்திருந்தால் -2 புள்ளிகள்**

**விளக்கியிருந்தால் -4 புள்ளிகள்**

**மொத்தப் புள்ளிகள் -6 புள்ளிகள்**

முதற் படிநிலை – கருத்துருவாக்கத் தலைவர்கள் ஊடகத்தினூடாகத் தகவலைப் பெற்றுக் கொள்ளல்.

இரண்டாம் படி நிலை – கருத்துருவாக்கத் தலைவர்கள் பொதுமக்களுக்குத் தகவலை வழங்குதல்.

(iv) தொடர்பாடல் செயன்முறையின் உயிரியல் அடிப்படையை இனங்காண ஏதுவாக அமையும் பெர்லோவின் தொடர்பாடல் மாதிரியின் அம்சங்கள் **நான்கினை** விளக்குக.

- தொட்டுணர்தல் /ஸ்பரிசம் - Touching
- சுவைத்தல் - Tasting
- பார்த்தல் - Seeing
- மணத்தல் - Smelling
- கேட்டல் - Hearing

- தொட்டுணர்வதன் மூலமாகத் தகவலைப் பெற்றுக் கொள்ளல்.
- சுவைப்பதன் மூலமாகத் தகவலைப் பெற்றுக் கொள்ளல்.
- யாதேனும் ஒன்றைப் பார்ப்பதன் மூலம் தகவலைப் பெற்றுக்கொள்ளல்
- ஏதேனும் மணத்தை நுகர்வதன் மூலம் தகவலைப் பெற்றுக் கொள்ளல்.
- ஏதேனுமொரு ஒலியைக் கேட்பதன் மூலம் தகவலைப் பெற்றுக்கொள்ளல்.

**விளக்கம்**

ஸ்பரிசம், சுவைத்தல், பார்த்தல், மணத்தல், கேட்டல் என்பன முறையே மெய், வாய்,கண், மூக்கு, செவி எனும் ஐம்புலன்களோடு தொடர்புபடுவதோடு இவ் ஐம்புலச் செயற்பாடு உயிரியல் அடிப்படையாகக் கருதப்படுகிறது. இதனடிப்படையில் தொடுகைத் தொடர்பாடல், சுவைத்தல் தொடர்பாடல், கட்புலத் தொடர்பாடல், சுவாசத் தொடர்பாடல், செவிப்புலத் தொடர்பாடல் என்பன தோன்றியுள்ளமை பற்றி விளக்கியிருத்தல் வேண்டும்.

**விபரித்திருந்தால் - 4x2=8 புள்ளிகள்**

**மொத்தப் புள்ளிகள் - 8 புள்ளிகள்**

**2.** மனித மொழிப் பாவனை, குறியீடுகள், சின்னங்கள், நாட்டார் கலைகள் ஆகியவற்றின் இணைப்பு, படைப்பாக்கத் தொடர்பாடலில் செல்வாக்குச் செலுத்தியுள்ளது. இது வெகுசன ஊடகங்கள் வழியாகவும் தெளிவுபடுத்தப்படுகிறது.

(i) செய்திப்பத்திரிகை ஊடகத்தில் மொழிப் பாவனையில் காணத்தக்க **நான்கு** தவறுகளைக் குறிப்பிடுக.

- எழுத்துப் பிழைகள்.
- கடின மொழிப் பாவனை.
- நிறுத்தற் குறியீடுகள் சார் தவறுகள்.
- பொது மொழி பயன்படுத்தப்படாமை / உபமொழி பயன்படுத்தல்.
- தவறான வசன அமைப்புகள்.
- அர்த்தம் சார் குழப்பங்கள் / தவறுகள்.
- இலக்கணத் தவறுகள்.
- செம்மையாக்கம் சார் தவறுகள்.
- மிகவும் எளிய மொழிப் பாவனை.
- பொருத்தமற்ற புதிய சொற்களைப் பயன்படுத்தல்.

**மொத்தப் புள்ளிகள் - 1/2 x4= 2புள்ளிகள்**

(ii) தொலைக்காட்சியில் ஒளிபரப்பப்படும் பால்மா விளம்பரங்களினால் நுகர்வோரிடத்தில் ஏற்படக்கூடிய தாக்கங்களை **இரண்டு** விடயங்களினூடாக விளக்குக.

- உணவுப் பழக்கவழக்கங்கள் மாற்றமடைதல்.
- அநாவசியமான தூண்டல் ஏற்படுத்தப்படல்.
- போலியான/ பிழையான மனப்பாங்குகள் ஏற்படுத்தப்படல்.
- தர்க்கரீதியற்ற வகையில் முடிவுகளை எடுத்தல்.
- போலியான / அவசியமற்ற தேவைகள் உருவாகுதல்.
- விருப்புக்கள் தேவைகளாக மாற்றம் பெறுதல்.
- பொருளாதரத்தில் தாக்கம் ஏற்படுதல்.
- புதிய சிந்தனைகளை ஏற்படுத்தல் .
- உணவு மற்றும் போஷணை பற்றிய நம்பிக்கைகளை மாற்றுதல்.
- பாரம்பரிய சம்பிரதாயங்களைக் கேள்விக்குட்படுத்தல்.
- பொருட்களின் விலை விபரங்களை அறியக் கூடியதாயிருத்தல்.
- பொருட்களை ஒப்பிட்டுத் தெரிவு செய்யும் வாய்ப்பு கிடைத்தல்.
- தரம் பற்றிய குழப்பம் ஏற்படுதல்.
- பொருட்களைப் பயன்படுத்தும் முறை பற்றிய விளக்கம் கிடைத்தல்.

**விபரித்திருந்தால் -2x2= 4 புள்ளிகள்**

**மொத்தப் புள்ளிகள் = 4 புள்ளிகள்**

(iii) பாடசாலை ஊடகச் சமூகத்தினால் முன்வைக்கப்படத்தக்க **நான்கு** படைப்பாக்கச் செயற்றிட்டங்களைப் பெயரிட்டு, அவ்வாறான செயற்றிட்டங்கள் ஊடாக பாடசாலையும் மாணவர்களும் அடையக்கூடிய **நான்கு** பயன்களைச் சுருக்கமாக விளக்குக.

**படைப்பாக்கச் செயற்றிட்டங்கள்**

- சூழல் அலங்கரிப்பு.
- சுவரொட்டிகள் தயாரித்தல்.
- பாடசாலை வானொலி சேவைகள்.
- சுவர்ப் பத்திரிகை / சஞ்சிகை வெளியிடுதல்.
- இரசனையை மேம்படுத்தக் கூடிய நிகழ்ச்சிகளை ஏற்பாடு செய்தல்.
- வழிகாட்டும் / திசைகாட்டும் அட்டைகளைத் தயாரித்தல்.
- மனப்பாங்கை விருத்தி செய்யக் கூடிய செயற்றிட்டங்கள்.
- அறிவுறுத்தல் நிகழ்ச்சிகள் ஏற்பாடு செய்தல்.
- ஊடக தின நிகழ்வுகள்.
- தலைமைத்துவப் பயிற்சிச் செயற்றிட்டங்கள்.

**பெயரிட்டிருந்தால் 1/2 x4 =2 புள்ளிகள்**

**பயன்கள்**

- பிரயோகரீதியான, குழுவாக இயங்கும் அனுபவங்களைப் பெற்றுக்கொள்ளல்.
- தொடர்பாடல் தேர்ச்சிகள் விருத்தியடைதல்.
- மென் திறன்கள் மேம்படுத்தப்படல்.
- படைப்பாக்கத் திறன் விருத்தியடைதல் .

- பாடசாலைக்கு நற்பெயர் உருவாதலும் அது பிரபல்யமடைதலும்.
- சமாதானம் , ஒற்றுமை மற்றும் ஒழுங்கமைப்பு ஆற்றல்கள் விருத்தியடைதல்.
- சமூகமயமாதலிற்கு உதவுதல் .
- புத்தாக்க உருவாக்கத்தை விருத்தி செய்தல்
- பொதுசன உறவைக் கட்டியெழுப்புதல்.
- சிறந்த மனநிலையை உருவாக்குதல்.
- மாணவர், ஆசிரியர் மற்றும் பெற்றோர் ஆகியோருக்கிடையிலான ஒத்துழைப்பை விருத்தி செய்தல்.
- பாடசாலை – சமூகத்திற்கிடையிலான உறவை மேம்படுத்தல்.

**விபரித்திருந்தால் = 4x1 = 4 புள்ளிகள்**

**மொத்தப் புள்ளிகள் = 6 புள்ளிகள்**

(iv) சிறார்களுக்குக் கல்வியறிவூட்டுவதில் நாட்டார் கதைகளைப் பயன்படுத்துவதன் முக்கியத்துவம் தொடர்பிலான **நான்கு** விடயங்களை உதாரணங்களுடன் விளக்குக.

- மகிழ்வூட்டல் மூலம் கல்வியறிவு வழங்குதல் / Edutainment.
- சூழல் மற்றும் பண்பாட்டு உரிமைகள் பற்றிய மனப்பாங்கை விருத்தி செய்தல்.
- படைப்பாக்கரீதியான சிந்தனையை உருவாக்குதல்.
- சமூகமயமாதலுக்குத் துணைபுரிதல்.
- கற்பனை ஆற்றலை விருத்தி செய்தல்.
- செவிமடுத்தல் தேர்ச்சி விருத்தியடைதல்.
- அறிவு மற்றும் சமூகப் பெறுதிகளுக்கிடையிலான தொடர்பை உருவாக்குதல்.
- நெகிழ்வுத் தன்மையுடன் கூடிய, முறைசாரக் கல்வி முறைக்குள் பிரவேசித்தல்.
- தர்க்கரீதியான சிந்தனை மற்றும் பகுப்பாய்வு செய்யும் திறன் விருத்தியடைதல்.
- கற்றல்– கற்பித்தல் செயன்முறை இலகுவாதல்.
- சிக்கலான விடயங்களைத் தெளிவுபடுத்திக் கொள்வதற்காகப் பயன்படுத்துதல்.
- அறிவு மட்டத்திற்குப் பொருந்தும் வகையில் விடயங்களை அறியச் செய்தல்.
- நவீனத்துவத்தில் தேசிய தனித்துவ அம்சங்களை உய்த்தறிய உதவுதல்.
- வெளிப்படுத்தும் ஆற்றல் விருத்தியை ஏற்படுத்துதல்.
- நினைவூட்டல் சக்தியை விருத்தி செய்தல்

**4x2=8 புள்ளிகள்**

**( உதாரணங்களுடன் விபரித்திருந்தால் மாத்திரம் முழுப்புள்ளிகள் வழங்குக)**

**3.** (i) அபிவிருத்தித் தொடர்பாடலில் பாரம்பரிய ஊடகங்களைப் பயன்படுத்துவதன் நன்மைகள் **நான்கினைக்** குறிப்பிடுக.

- பொதுமக்களுக்கு மிகவும் நெருக்கமான ஊடகம்.
- நம்பிக்கைத்தன்மை உறுதிப்படுத்தப்படல்.
- பொதுமக்களுக்குப் பழக்கமான மற்றும் நெருக்கமான குறியீடுகள், சமிக்ஞைகள் காணப்படல்.
- செயற்படு பெறுநர்கள் காணப்படுவர்.
- அடித்தள, கிராமப்புற மக்களுக்குரிய ஊடகமாக அமைதல்.
- அடித்தள, கிராமப்புற மக்கள் மத்தியில் தூண்டலை ஏற்படுத்தக் கூடியதாயிருத்தல்.

- குறைந்த செலவீனம்
- மகிழ்வூட்டல் அம்சங்கள் காணப்படுவதால் பெறுநர்களை இலகுவில் கவர முடிதல்.
- தொழினுட்ப இடையூறுகள் காணப்படாது.
- நாட்டார் மக்களது அறிவுடன் இணைந்த ஊடகம்.
- எழுத்தறிவு அவசியமில்லை.

**1/2x4 = 2 புள்ளிகள்**

(ii) செய்திப்பத்திரிகை ஊடகத்தில் வன்முறை சித்திரிக்கப்படும் விதங்கள் **நான்கினைக்** குறிப்பிட்டு, அவற்றுள் **ஒன்றை** விவரிக்குக.

- செய்திகளின் தலையங்கங்கள் ஊடாக.
- புகைப்படங்கள் / கேலிச்சித்திரங்கள் ஊடாக.
- கொலை, களவு, பலாத்காரம் முதலான செய்திகளை அறிக்கையிடும் முறையின் ஊடாக.
- அரசியற் செய்திகளில் பயன்படுத்தப்படும் மொழியின் ஊடாக.
- போர் தொடர்பான செய்தி அறிக்கையிடலில் பயன்படுத்தப்படும் வசனங்கள் , புகைப்படங்கள் ஊடாக.
- விளம்பரங்களில் பயன்படுத்தப்படும் வர்ணங்கள் , மொழி, புகைப்படங்கள், வசனங்கள் ஊடாக.
- பாலியல் உணர்வைத் தூண்டும் விளம்பரங்கள் மற்றும் செய்தி அறிக்கையிடல் ஊடாக.
- முரண்பாடுகள் தொடர்பான உணர்திறனற்ற செய்தி அறிக்கையிடல் ஊடாக.
- தேசிய, இன, மத, முரண்பாடுகளை ஏற்படுத்தும் வகையிலான செய்தி அறிக்கையிடலின் ஊடாக.
- செம்மையாக்கம் செய்யாது புகைப்படங்கள் / செய்திகளை அவ்வாறே பிரசுரித்தல்.
- குற்றங்களை அறிக்கையிடுவதற்காக விசேட பக்கங்கள் / மேலதிக இணைப்புகள் காணப்படுதல்.
- சமமற்ற விதத்தில் செய்தியறிக்கையிடல் ஊடாக.
- பக்கச்சார்பான விதத்தில் செய்தியறிக்கையிடல் ஊடாக.
- குடும்ப முரண்பாடுகளைத் தூண்டும் வகையிலான செய்தியறிக்கையிடல் ஊடாக.

**பெயரிட்டிருந்தால் -1/2x4 = 2 புள்ளிகள்**

**விபரித்திருந்தால் -1x2 = 2 புள்ளிகள**

**மொத்தப் புள்ளிகள்= 4 புள்ளிகள்**

(iii) பலவீனமான செவிமடுத்தல் ஆற்றல் உருவாவதற்கு ஏதுவாகும் **மூன்று** காரணிகளை உதாரணங்களுடன் விளக்குக.

- சொல்லப்படும் விடயம் அவசியமற்றது என எண்ணுதல்.
- சரியான கவனமின்மை.
- புலக்காட்சியிலுள்ள குறைபாடு.
- மொழியைப் புரிந்து கொள்வதிலுள்ள குறைபாடு .
- உடல்சார் அசௌகரியங்கள்.
- சூழல் சார் இடையூறுகள்.
- தொடர்பாடல் கருவிகளில் காணப்படும் தடைகள்.
- குறைவான /குறைந்த ஒலி.

- தொடர்பாடுநரிடம் காணப்படும் குறைபாடுகள்.
- ஆர்வமின்மை.
- ஒருநிலைப்படுத்தப்பட்ட தன்மையற்று இருத்தல்.
- மொழியைக் கிரகித்தலிலுள்ள குறைபாடுகள்.

**2x3= 6 புள்ளிகள்**

**(உதாரணங்களுடன் விளக்கியிருந்தால் மாத்திரம் முழுப்புள்ளிகள் வழங்குக)**

(iv) 'வதந்திச் சங்கிலி' என்பதனைச் சுருக்கமாக இனங்கண்டு, வதந்திகளை அடிப்படையாகக் கொண்டு சமூக முரண்பாடுகள் ஏற்படக்கூடிய **மூன்று** விதங்களை உதாரணங்களுடன் விளக்குக.

**வதந்திச் சங்கிலி**

ஒருவரிடமிருந்து மற்றைய எல்லோருக்கும் தகவல் செல்லுதல். நிச்சயிக்கப்பட்ட மூலாதாரம் ஒன்று இன்றி முறைசாராத விதத்தில் தகவல் பரவுதல்.

சமூக முரண்பாடுகள் ஏற்படக்கூடிய விதங்கள்

- விளக்கமின்மை / சரியான புரிதல் இல்லாமை.
- அவ நம்பிக்கைகள்.
- சந்தேகங்கள் உருவாகுதல்.
- சரியான தகவல்கள் கிடைக்கப் பெறாமை.
- தனிப்பட்ட நடத்தை / உளப்போக்குகள் காரணமாக முரண்பாடுகள் ஏற்படல்.
- வெறுப்பூட்டும் தகவல்கள் காரணமாக முரண்பாடுகள் ஏற்படல்.
- மிகையான விதத்தில் தகவல்களைக் கூறுவதால் முரண்பாடுகள் ஏற்படல்.
- சமூகத்தில் ஏற்றுக்கொள்ளப்பட்ட விடயங்களைச் சவாலுக்குட்படுத்தல்.
- சரியான தகவல்கள் தகவல் மூலத்திற்குக் கிடைக்கப் பெறாமை.
- தகவல் பரவுகையைக் கட்டுப்படுத்த முடியாது போதல்.

**வதந்திச் சங்கிலி - 2x1= 2 புள்ளிகள்**

**சமூக முரண்பாடுகள் பற்றி விபரித்திருந்தால் -3x2= 6 புள்ளிகள்**

**மொத்தப் புள்ளிகள் = 8 புள்ளிகள்**

**(மூன்று விடயங்கள் உதாரணங்களுடன் விபரித்திருந்தால் மாத்திரம் முழுப்புள்ளிகள் வழங்குக)**

**4.** (i) போற்றத்தக்க வகையில் ஆளுள் தொடர்பாடலை மேற்கொள்வதற்கு விருத்தி செய்ய வேண்டிய தேர்ச்சிகள் **நான்கினைப்** பெயரிடுக.

- பல்வேறு மூலாதாரங்கள் மூலம் வெவ்வேறு தகவல்களைத் திரட்டுதல் / தகவல் திரட்டுதல்.
- ஒருவரின் எண்ணத்தில் சேமித்துள்ள பல்வேறு தகவல்களில் தனது செய்திக்குப் பொருந்தக்கூடிய தகவல்களை மட்டும் பயன்படுத்தல் /மனதைக் கையாளுதல்.
- தர்க்கரீதியான சிந்தனை மற்றும் தீர்மானம் எடுத்தல்.
- தேவைக்கேற்றவாறு செய்திகளை உருவாக்குதல்.
- நாகரீகமான முறையில் செய்திகளை முன்வைத்தல்.

- படைப்பாக்க ஆற்றல்.
- வினைத்திறனான மொழிப் பாவனை.
- சுய எண்ணக்கரு விருத்தி.
- ஐம்புலன்களை வினைத்திறனான முறையில் செயற்படுத்துதல்.
- கற்றல் செயற்பாடு.
- ஆழ்பரிவு.
- பயிற்சி.
- நினைவூட்டல் / ஞாபகப்படுத்தல்.

**1/2x4 = 2 புள்ளிகள்**

(ii) "படைப்பாக்கத் தொடர்பாடலின் தோற்றுவாய்களுள் ஒன்றாக செய்திப்பத்திரிகைகள் இருந்து வருகின்றன." மேற்படிக் கூற்றை உறுதிப்படுத்தக்கூடிய **இரண்டு** விடயங்களைச் சுருக்கமாக விவரிக்குக.

- புதிய எழுத்து நடைகள் உருவாகுதல்.
- புதிய எழுத்து நுட்பங்கள் தோன்றுதல்.
- புகைப்படங்கள் மற்றும் பனுவல்களை ( Text) வினைத்திறனான முறையில் முன்வைத்தல்.
- சிக்கல் நிறைந்த சமூக, அரசியல் கருத்துக்களைச் சித்திரங்கள், கேலி சித்திரங்கள் முதலான படைப்பாக்கங்கள் மூலமாக முன்வைத்தல்.
- வாசகரது தேவைகளை வகைப்படுத்தித் தகவல்களை முன்வைத்தல்.
- பல்வேறு பரிமாணங்களிலான / வடிவங்களிலான செய்திப் பத்திரிகைகள் தோற்றம் பெறல்.
- வெவ்வேறு வெளியீட்டு விதிகள் மற்றும் முறைகளை ஒன்றிணைத்துத் தகவல்களை முன்வைத்தல்.
- பத்திரிகைகள் மூலமாக வெவ்வேறு சம்பிரதாய மொழிகளைப் பயன்படுத்துதல், முறைசார்ந்தவாறு வெளிப்படுத்துதல்.
- கருத்துக்களை கவர்ச்சியான முறையில் முன்வைத்தல்.
- பல்வேறு படைப்பாக்குநர்கள் தோற்றம் பெறல் (கவிஞர்கள், எழுத்தாளர்கள்).

**2x 2 = 4 புள்ளிகள்**

(iii) "பிரசித்தமான பண்பாடு சமூகத்தின் வீழ்ச்சிக்கும்கூடக் காரணமாகலாம்." இந்தக் கூற்றுக்கு ஆதரவாக **மூன்று** விடயங்களை அடிப்படையாகக் கொண்டு விளக்குக.

- பாரம்பரியப் பண்பாட்டுப் பெறுதிகள் / விழுமியங்கள் பின்தள்ளப்படுதல்.
- பாரம்பரியச் சமூகத்தின் மனிதத் தொடர்புகள் வணிகமயப்படுத்தப்படல்.
- போலியான / அவசியமற்ற தேவைகள் உருவாக்கப்படல்.
- பொருத்தமற்ற நுகர்வுப் பழக்கவழக்கங்களிற்கு ஆளாகுதல்.
- பொருளாதார, சமூக, உளவியல் நிலைகள் சிதைவு நிலைக்குத் தள்ளப்படுதல்.
- பிரசித்த பண்பாட்டிற்கு அடிமையாக இருப்பதை உணராமை.
- உள்ளடக்கத்தின் முக்கியத்துவத்தை விட, வெளித்தோற்றத்திற்கு அதிக முக்கியத்துவம் கிடைக்கப்பெறல்.
- எளிமை மற்றும் குறுகிய கால / நீண்ட காலப் பாவனை காணப்படாமை.
- சமூகப் பெறுமானங்கள், சிந்தனை, ஆழ்பரிவு, அறிவு மட்டம் என்பன சந்தைத் தேவைகளுக்கேற்ப

மாற்றியமைக்கப்படல்.

- தொடர் மாற்றங்களுக்கு ஆட்படல்.

**2x3 = 6 புள்ளிகள்**

(iv) "முரண்பாடுகள் சமூக முன்னேற்றத்திற்கு ஆதரவான காரணிகளாகும்."

இந்தக் கருப்பொருளுக்கு அமைவாக அதற்குச் சார்பான இரண்டு விடயங்களையும் எதிரான இரண்டு விடயங்களையும் அடிப்படையாகக் கொண்டு பாடசாலைச் சஞ்சிகையொன்றுக்கு 250 சொற்களுக்குக் குறையாத கட்டுரையொன்றை எழுதுக.

**சார்பானவை**

- சவால்களை எதிர்கொள்ளக் கூடிய ஆற்றல் உருவாகுதல்.
- சமூகத்தில் ஏற்படுகின்ற முரண்பாடுகளைச் சமூக அபிவிருத்திக்காகப் பொருத்தமான முறையில் நிலைமாற்றம் செய்தல் .
- புத்தாக்கங்களிற்கு வழிகாட்டுதல்.
- சமூக வாழ்வின் யதார்த்தத்தை விளங்கிக் கொள்ளும் ஆற்றல் உருவாகுதல்.
- சமூகத்தில் காணப்படும் பாரம்பரிய / மரபுசார்ந்த நிலைமைகளுக்கு எதிராக, புதிய செயற்படு நிலைமைகளை உருவாக்குதல்.
- முரண்பாடுகளைத் தீர்ப்பதற்காகக் கலந்துரையாடல்களை ஆரம்பித்தல்.
- சமூக மற்றும் தனிநபர் படைப்பாக்கத்தில் முரண்பாடுகள் புதிய சக்தியுடன் செயற்படல்.
- முரண்பாடுகளை பொதுத்தன்மையுடன் மற்றும் தனித்துவத்துடன் தீர்ப்பதற்கு முனைதல்.

**எதிரானது**

- சமூகத்தில் பிரிவுகள் தோன்றுதல்.
- சமூகத்தின் பயன்படு சக்தியை வலுவிழக்கச் செய்தல்.
- முரண்பாடுகள் சமூகப் பிரச்சினைகளாக மாற்றம் பெறல்.
- உயிர் மற்றும் சொத்துக்களுக்கு சேதம் ஏற்படுதல்
- மனித உரிமைகள் புறக்கணிக்கப்படுதல் / இழக்கப்படுதல்.
- சமூகப் பாரம்பரியங்கள் மற்றும் விழுமியங்கள் வீழ்ச்சியடைதல்.
- மனிதர்கள் தனிமைப்படுத்தப்படல்.
- சமூக அவநம்பிக்கைகள் அதிகரித்தல்.
- ஏற்றுக்கொள்ளாமை அதிகரித்தல்.
- நல்லிணக்கம் பாதிப்படைதல்.
- மனிதர்களது செயற்றிறன் வீழ்ச்சியடைதல்.

**சார்பாக - 2x2 = 4 புள்ளிகள்**

**எதிராக 2x2= 4 புள்ளிகள்**

**மொத்தப் புள்ளிகள்= 8 புள்ளிகள்**

**(சஞ்சிகை ஒன்றிற்கான ஆக்கம் போல் எழுதப்பட்டிருத்தல் வேண்டும்)**

**5.** சமூகத்தின் நலநோம்பலுக்காக ஊடகங்கள் அளப்பரிய பங்களிப்பைச் செய்கின்றன."

(i) பல்லினப் பண்பாட்டுச் சமூகமொன்றின் நல்வாழ்வுக்காக ஊடகங்கள் செயற்படவேண்டிய விதங்கள் **நான்கினைக்** குறிப்பிடுக.

- கலந்துரையாடற் தளமாகச் செயற்படுதல்.
- வெவ்வேறு பண்பாட்டுச் சிறப்பியல்புகளை மேலுயர்த்திக் காட்டுதல்.
- பண்பாடு, இன, மதப் பாதுகாவலனாக ஊடகங்கள் செயற்படல்.
- மறைமுக நிகழ்ச்சி நிரல்கள் காணப்படாது செயற்படல்.
- ஊடகப் பிரதிநிதித்துவம் சரியான முறையில் செயற்படுவதன் மூலம் அனைவருக்கும் சமனான சந்தர்ப்பங்களை ஏற்படுத்திக் கொடுத்தல்.
- வெளிப்படைத்தன்மையுடன் செயற்படுதல்.
- முரண்பாட்டுச் சூழல் உருவாகாதவாறு செயற்படுதல்.
- ஒத்ததன்மையினராக்குதலில் இருந்து விலகிச் செயற்படுதல்.
- இன, பண்பாடு, மதப் பெறுமானங்கள் தொடர்பில் மிகுந்த கவனத்துடன் செயற்படுதல். -
- ஊடகங்கள் அதிகளவில் மக்கள் மையப்பட்டு செயற்படுதல்.

**1/2x4 = 2 புள்ளிகள்**

(ii) தொடர்பாடலானது சமூகத்துக்கு முக்கியத்துவமானதாய் அமையும் விதம் தொடர்பான **நான்கு** விடயங்களைக் குறிப்பிட்டு, அவற்றுள் **இரண்டினை** விவரிக்குக.

- வெவ்வேறு தரப்பினருக்கு இடையில் தொடர்புகளை ஏற்படுத்துவதற்கு.
- ஒற்றுமையை ஏற்படுத்துவதற்கு.
- சமூக அபிவிருத்தியைத் தூண்டுவதற்கு.
- தகவல் வழங்குவதற்கு.
- அறிவைப் பெற்றுக் கொள்வதற்கு.
- அறிவுரை வழங்குவதற்கு.
- முரண்பாடுகளை இழிவளவாக்குவதற்கு.
- நண்பர்கள் / உறவினர்கள் இடையே தொடர்புகளை வலுப்படுத்துவதற்கு.
- மக்கள் தொடர்புகளை ஊக்குவிப்பதற்கு.
- ஒத்திசைவான செயற்பாடுகளை ஊக்குவிப்பதற்கு.
- சமூக நிறுவனங்கள் உருவாக்கப்படுவதற்கு.
- சமூகச் செயற்றிறனை ஊக்குவிப்பதற்கு

**பெயரிட்டிருந்தால் -1/2x4 = 2 புள்ளிகள்**

**விபரித்திருந்தால் -1x2 = 2 புள்ளிகள்**

**மொத்தப் புள்ளிகள்= 4 புள்ளிகள்**

(iii) வேறுபட்ட மத உப பண்பாடுகளுக்குரிய குடும்பங்கள் மத்தியில், மானுட உறவுகளை விருத்தி செய்வதற்கு உதவும் சமய விழாக்கள் **இரண்டினை** உதாரணங்களுடன் விவரிக்குக.

- வெசாக் விழா.
- பொசன் விழா.
- அசல விழா.
- தைப்பொங்கல் விழா.
- மகாசிவராத்திரி விழா.
- தீபாவளி விழா.
- உயிர்த்த ஞாயிறு விழா.
- நத்தார் விழா.
- ரமழான் விழா.
- ஹஜ் பெருநாள்.
- சித்திரை வருடப் பிறப்பு **விபரித்திருந்தால் -2x3 = 6 புள்ளிகள்**

**(சமய விழாக்களுக்கூடாக மானுட உறவுகள் விருத்தி செய்யப்படும் முறை விபரிக்கப்பட்டிருத்தல் வேண்டும்.)**

(iv) நீங்கள் விரும்பும் ஏதேனும் சமயத்திற்கு உரித்தான, சமூகத்தில் சமாதானத்தைப் பேணுவதற்கான **இரண்டு** போதனைகளை இனங்கண்டு, ஒவ்வொன்றிற்கும் தலா **இரண்டு** உதாரணங்கள் வீதம் தந்து அவற்றின் முக்கியத்துவத்தை விளக்குக.

சமாதானத்தைப் பேணுவதற்கான இரு போதனைகள்

**பௌத்தம்**

- மூவகை சுதந்திரம் பற்றிப் பேசப்படல் (உள்ளம்/ பேச்சு / செயல்).
- நபர் ஒருவருக்கு எநதவொரு வதைகளும் அல்லது தாக்கங்களும் செய்யாது இருத்தல்.
- பாவமன்னிப்பினூடான சமாதானத்தைப் பேணுதல்.
- மனசாட்சியின்படி செயலாற்றுதல்.
- அட்டசீலங்களைக் கடைப்பிடித்து வாழ்தல்.
- பிரதான மூலதர்மங்களினூடே சமாதானத்தைப் பேணுதல் (அன்பு / கருணை).

**கிறிஸ்தவம்**

- அனைத்து மனிதர்களும் இறைவனின் குழந்தைகள் என்ற வகையில் செயற்படல்.
- மனித சுதந்திரத்திற்கு மதிப்பளித்தல்.
- வாழ்க்கையானது பைபிள் வெளிக்காட்டும் கருத்துக்களாகும்.
- கொலை மற்றும் காயங்களை ஏற்படுத்துதலை தவிர்த்தல் வேண்டும்.
- பொய் பேசுதல் கிறிஸ்தவ சட்டத்தின்படி குற்றம்.
- உங்களையும் மற்றும் உங்கள் அயலவர்களையும் நேசியுங்கள்.

**இஸ்லாம்**

- இறைவனால் படைக்கப்பட்டவர்களிடம் அன்பு செலுத்துவோமாயின் இறைவன் தம்மிடத்தே அன்பு செலுத்துவான்.
- அனைத்துச் சந்தர்ப்பங்களிலும் சகோதரத்துவம் தொடர்பான உணர்வுகளை வெளிப்படுத்துதல்.
- ஒன்றாக வாழுதல், ஒருவருக்கு எதிராக எதிர் தந்திரச் செயல்களை மேற்கொள்ளாதிருத்தல்.
- நபர்களினால் வேறு நபர்களுக்கு நிந்தனை செய்யாது இருத்தல்.
- உங்கள் செயற்பாடுகள் உங்களுக்கே.

**இந்துசமயம்**

- சமாதானம் பற்றித் தியானம் செய்யுங்கள், சமாதான மந்திரத்தைக் கூறுங்கள்.
- அனைத்து மனிதர்களும் பிறப்பில் சமமானவர்கள்.
- மனித வர்க்கம் சகோதரத்துவத்துடன் ஒன்றுபட்டு வாழ்தல்.
- ஒன்றே குலம் ஒருவனே தேவன்
- செய்நன்றி செய்தல் அவசியம்.
- ஒழுக்கப்பண்புள்ள மனிதராய் வாழ்தல் அனைவரதும் கடமை.

**புள்ளிகள் 4 x 2 = 8 புள்ளிகள்**

**(1 போதனைக்கு 2 உதாரணங்கள் மூலம் விபரித்திருந்தால் மாத்திரம் முழுப்புள்ளிகள் வழங்கவும்)**

**6.** (i) தேசிய நெருக்கடிச் சந்தர்ப்பங்களில் அரசாங்கத்தினால் ஊடகத் தணிக்கை நடைமுறைப்படுத்தப்படும். சமூக ஊடகங்களைத் தணிக்கை செய்வதால் சமூகத்திற்கு ஏற்படும் அனுகூலங்கள், பிரதிகூலங்கள் **இரண்டு** வீதம் குறிப்பிடுக.

**அனுகூலங்கள்**

- சமூகத்தில் போலியான தகவல்கள் பரவுதல் தடுக்கப்படுதல்.
- சமூகத்தில் தவறான தகவல்கள் பரவுதல் தடுக்கப்படுதல்.
- சமூகத்தில் முரண்பாடுகள் ஏற்படுதல் தடுக்கப்படுதல்.
- சமூகத்தின் குழப்பமான / புரிந்துகொள்ள முடியாத நிலைமைகளைக் கட்டுப்படுத்தல்.
- தனிநபர் மற்றும் மக்கள் குழுவினருக்கு ஏற்படக் கூடிய ஆபத்துக்கள் தடுக்கப்படுதல்
- அசௌகரியமான, பொருத்தப்பாடற்ற தகவல்கள் மக்களைச் சென்றடைதல் தடுக்கப்படுதல்.
- வெறுப்பூட்டும் பேச்சுக்கள் தடுக்கப்படுதல்.
- அன்றாட நிலைமைகளுக்கேற்ப ஆட்சியைக் கொண்டு செல்லுதல்.
- ஊடகங்கள் மூலம் உறுதிப்படுத்தப்பட்ட அதிகாரபூர்வமான செய்திகளைப் பெற்றுக் கொள்ளமுடியுமாயிருத்தல்.
- தனிநபர் மையப்படுத்தப்பட்ட செய்திகள் வெளியிடப்படுவது கட்டுப்படுத்தப்படும்.
- ஒழுக்க நெறிகள் மீறப்படுவது தடுக்கப்படும்.

**பிரதிகூலங்கள்**

- சுதந்திரமாகக் கருத்து வெளியிடுவது மட்டுப்படுத்தப்படல்.
- தகவல் அறியும் சுதந்திரம் மீறப்படுதல்.
- சாதாரண மக்களது குரல் ஒடுக்கப்படுதல்.
- ஆதிக்கவாதக் கருத்தியல்கள் வலுப்படுத்தப்படுதல்.
- முறைசாராத் தொடர்பாடல்கள் ஊக்குவிக்கப்படுதல்.
- சமூக ஊடகங்களுடன் தொடர்புடைய வியாபாரத் துறை வீழ்ச்சியடைதல்.
- படைப்பாக்கரீதியான சிந்தனை தடைப்படுதல்.
- மக்கள் கருத்து / அபிப்பிராயம் உருவாக்கம் தடைப்படுதல்.
- மாற்று ஊடகங்களின் செயற்பாடுகள் பாதிப்படைதல்.
- அதிகாரபூர்வமற்ற செய்திகள் பரவுதல் அதிகரித்தல்

**அனுகூலங்கள் = 2x1/2= 1 புள்ளி**

**பிரதிகூலங்கள் = 2x1/2 = 1 புள்ளி**

**மொத்தப்புள்ளிகள் = 2 புள்ளிகள்**

(ii) பொதுசனத் தொடர்பு நடவடிக்கைகளுக்காக முகநூலின் (Facebook) மூலம் பெற்றுக்கொள்ளத்தக்க நன்மைகள் **நான்கினைக்** குறிப்பிட்டு, அவற்றுள் **ஒன்றினை** விளக்குக.

- உடனடியான எதிர்வினைகளைப் பெற்றுக் கொள்ள இயலுமாயிருத்தல்.
- தடைகளின்றி உடனடியாகத் தொடர்பை ஏற்படுத்தக்கூடியதாயிருத்தல்.
- ஊடகக் குவிகை காணப்படுதல்.
- தகவலொன்றை அதிவிசாலப் பெறுநர்களுக்கிடையே பரிமாற்றம் செய்ய இயலுமாயிருத்தல்.
- புதிய தொடர்புகளைக் கட்டியெழுப்பக் கூடியதாகயிருத்தல்.
- ஒருவரிடமிருந்து பலருக்கும், பலரிடமிருந்து பலருக்கும் தகவலொன்றை வழங்க முடிதல்.
- பொருட்கள் மற்றும் சேவைகள் பற்றிய தகல்களை முன்வைப்பதற்கு உதவுதல்
- அரசியல் பிரதிமைகளை மேலுயர்த்துவதற்கு.
- இலக்குப் பெறுநர்களுக்குத் தகவல் வழங்குவதற்கு.
- ஒப்பீட்டளவில் குறைந்த செலவீனம் உடையதாயிருத்தல்.
- நேரம் மற்றும் காலத்திற்கு இடையிலான இடைவெளி குறைவடைதல்.
- மீயுரை (Hypertext) பயன்படுத்தப்படுதல்.
- வியாபார இலக்குகளை அடையமுடியுமாயிருத்தல்.

**பெயரிட்டிருந்தால் = 1/2x4= 2 புள்ளிகள்**

**விளக்கியிருந்தால் = 1x2 = 2 புள்ளிகள்**

**மொத்தப் புள்ளிகள் = 4 புள்ளிகள்**

(iii) "பழமொழிகள் சுதேச அறிவையும் ஞானத்தையும் வெளிப்படுத்துகின்றன." பழமொழிகளில் காணப்படும் தொடர்பாடல் முக்கியத்துவத்தை **மூன்று** விடயங்களினூடாக விளக்குக.

- படைப்பாக்கரீதியாகக் கருத்துகளை முன்வைத்தல்.
- பரந்த கருத்துக்களைச் சுருக்கமாகக் கூறுதல்.
- கவர்ச்சியான முறையில் கருத்துக்களை வெளியிடுதல்.
- சமூகத்திற்குத் தேவையான அறிவை வழங்குதல்.

- சமூக மக்களிடையே தொடர்புகளை உருவாக்குதல்.
- படைப்பாக்கரீதியான சிந்தனையை உயிர்ப்பித்தல்.
- செய்திகளைப் புலக்காட்சி செய்வதற்கும், விளக்கிக் கொள்வதற்கும் துணைபுரிதல்.

**3x2= 6 புள்ளிகள்**

(iv) அபிவிருத்திச் செயற்றிட்டம் ஒன்றில் மதிப்பீட்டுச் செயலொழுங்கின் மூலம் எதிர்பார்க்கப்படுவது யாது என்பதை **நான்கு** விடயங்களுக்கூடாக விளக்குக.

- செயற்பாட்டுரீதியான சந்தர்ப்பங்களை மதிப்பீடு செய்தல்.
- நடைமுறை விடயங்களை விளங்கிக் கொள்தல்.
- நேரவரையறைக்குப் பொருந்தக் கூடியதா என்பதைக் கண்டறிதல்.
- செயற்றிட்டத்தைப் பகுப்பாய்வு செய்தல்.
- செயற்றிட்டத்தை மதிப்பீடு செய்தல்
- செயற்றிட்டத்தின் அனுகூலங்கள் மற்றும் பிரதிகூலங்களை இனங்காணுதல்.
- செலவீனங்களை முகாமைத்துவம் செய்தல்.
- செயற்திறனை மதிப்பீடு செய்தல்.
- செயற்றிறனான சந்தர்ப்பங்களைச் சரிவர மதிப்பீடு செய்தல்.
- முரண்பாடுகள், வரையறைகள், சவால்களை இனங்காணுதல். **4x2= 8 புள்ளிகள்**

**7.** தொடர்பாடல் செயற்பாட்டில் மாத்திரமன்றி விமர்சனத் துறையிலும் ஊடக விளங்கறிவு முக்கியமானதாகும்.

(i) ஊடக விளங்கறிவின் பிரதான எண்ணக்கருக்கள் **நான்கினைக்** குறிப்பிடுக.

- அனைத்து ஊடகத் தகவல்களும் விசேடமான நோக்கங்களுக்காகக் கட்டியெழுப்பப்படும்.
- ஊடகம் யதார்த்தத்தைக் கட்டியெழுப்பும் (ஊடக யதார்த்தம்)
- பெறுநர்கள் தமக்கேற்றவாறு ஊடகத் தகவல்களுக்குப் பொருட்கோடல் செய்வர்.
- பெரும்பாலும் ஊடகத் தகவல்கள் இலாபத்தை நோக்காகக் கொண்டு உருவாக்கப்படும் (வணிக மயம்).
- ஊடகத் தகவல்களில் கருத்தியல்கள் மற்றும் பெறுமானங்கள் என்பன காணப்படும்.
- சமூக மற்றும் அரசியல் மதிப்பீடுகள் ஊடகத் தகவல்களில் உள்ளடங்கும்.
- ஊடகத் தகவல்களின் உள்ளடக்கம் மற்றும் மாதிரி என்பன ஒன்றுடனொன்று நெருங்கிய தொடர்புடையது.
- அனைத்து ஊடகத் தகவல்களிலும் விசேடமான அழகியல் அம்சங்கள் காணப்படும்.

**1/2x4= 2 புள்ளிகள்**

(ii) தற்காலத்தில் ஊடகங்கள் தேசிய அளவிலும் சர்வதேச அளவிலும் செல்வாக்குச் செலுத்தும் ஒரு காரணியாக மாறியுள்ளன. பூகோள ஊடகங்கள் தேசிய பண்பாட்டில் தாக்கம் செலுத்தியுள்ள விதத்தினை **இரண்டு** விடயங்களுக்கூடாக விமர்சனரீதியாக விவரிக்குக.

- பாரம்பரிய, சமூக, பண்பாட்டுப் பெறுமானங்கள், மற்றும் உதாரணங்கள் மாற்றமடைதல்.
- புதிய பண்பாடுகள் சமூகமயமாதல்.
- மேற்கத்தேய சமூகப் பண்பாட்டுப் பெறுமானங்கள் தேசிய பண்பாட்டுப் பெறுமானங்களுடன் முரண்படுதல்.
- உணவுப் பண்பாடு மாற்றமடைதல்.

- மனிதத் தொடர்புகள் / உறவுகள் வணிகமயப்படுத்தப்படல்.
- புதிய பண்பாட்டம்சங்கள் அறிமுகம் செய்யப்படுதல் (காதலர் தினம், ஹலோவியன் தினங்கள்).
- தேசியத் தகவல்களை விட மேற்கத்தேயத் தகவல்களுக்கு முன்னுரிமை கிடைக்கப்பெறல்.
- தேசியத் தகவல்களை விட மேற்கத்தேயத் தகவல்களை அதிகம் நம்புதல்.
- தேசியத் தகவல்களைப் பெற்றுக்கொள்வதற்கும் பூகோள ஊடகங்களை நாடுதல்.
  (உ.ம்:- லிப்டன் சுற்றுவட்டத்தில் இடம்பெற்ற மாணவர் போராட்டம் பற்றிய செய்தியை AFP செய்திச் சேவையில் இருந்து பெற்றுக் கொள்ளல்)
- அதிக தகவல் பரவுகை.
- ஏதேனும் விசேடமான ஒரு தலைப்பில் மாத்திரம் அறிக்கையிடல் (முரண்பாடு, போர், இயற்கை அனர்த்தம், அரசியல் முரண்பாடுகள்)

**2x2= 4 புள்ளிகள்**

(iii) ஊடக விளங்கறிவானது திறன்களை அடிப்படையாகக் கொண்டதாகும். அவ்வாறான திறன்கள் **மூன்றினை** விவரிக்குக.

- தனிநபர் மற்றும் மக்களது தேவைகளுக்கேற்ப ஊடகத் தொழினுட்பத்தை உபயோகித்தல் (உபயோகிக்கும் திறன் / நுகரும் திறன்).
- பரந்த விசாலமான பகுதியினரிடையே பரவிக் காணப்படும் ஊடகங்களின் வடிவங்கள் மற்றும் உள்ளடக்கங்கள் என்பவற்றை மதிப்பீடு செய்தல் (மதிப்பீடு செய்யும் திறன்).
- ஊடகத் தயாரிப்பாளர்களின் நோக்கங்கள் மற்றும் தேவைகளை இனங்காணுதல்.
- கருத்து, தகவல் மற்றும் கருத்தியல்களைத் தொடர்பாடல் செய்வதற்கு ஊடகங்களைப் படைப்பாக்க ரீதியில் பயன்படுத்தல் (நிர்மாணிக்கும் திறன்).
- பொறுப்புடன் ஊடகங்களைப் பயன்படுத்தல்.
- ஜனநாயக ரீதியான உரிமையொன்றான ஊடகப் பாவனையை வினைத்திறனான முறையில் பயன்படுத்தல்.
- ஊடகங்கள் மூலம் தகவலைப் பரிமாற்றம் செய்யப் பயன்படுத்தப்படும் தொழினுட்பம் / மொழி / விதிமுறைகள் என்பவற்றைப் பகுப்பாய்வு செய்தல் (பகுப்பாய்வு செய்யும் திறன்).
- ஆதிக்கத் தன்மை, களங்கம் ஏற்படுத்தல் முதலான ஊடக உள்ளடக்கங்களை இனங்கண்டு அவற்றைச் சவாலுக்குட்படுத்தல்.

**2x3= 6 புள்ளிகள்**

(iv) பூகோளப் பண்பாடானது தேசியப் பண்பாட்டின் மீது செல்வாக்கு செலுத்தும் விதம் தொடர்பான **நான்கு** விடயங்களை தொலைக்காட்சி ஊடகத்தினை அடிப்படையாகக் கொண்டு பகுப்பாய்வு செய்க.

- நுகர்வுப் பண்பாடு உருவாகுதல்.
- பூகோளப் பிரசித்த பண்பாடு பரவலடைதல்.
- பூகோள ஊடக மாதிரிகள் பயன்படுத்தப்படல்.
- திரைப்படங்கள், தொலைக்காட்சி நாடகங்கள் என்பவற்றில் தொழினுட்பத்தால் உருவாக்கப்பட்ட கதாபாத்திரங்கள் பிரபலமடைதல்.

- பூகோள ஊடகம் உள்ளூர் மயப்படுத்தலுக்கு உட்படுதல் (உ.ம்:- தமிழில் Discovery அலைவரிசை)
- உயர் தொழினுட்பத்துடன் கூடிய / அலைவரிசைகளுடன் போட்டியிடமுடியாது போதல்.
- மானுடப் பண்பாட்டில் காணப்படும் படைப்புகள் பூகோளப் பண்பாட்டில் காணப்படும் தயாரிப்புகள் காரணமாக ஒடுக்கப்படுதல்.
- பண்டமயமாக்கப்படுதல்.
- பௌதிகப் பண்பாடு உருவாக்கப்படுதல்.
- சமூகப் பண்பாடு தனிநபர் பண்பாடாக மாற்றமடைதல்.
- மனித உறவுகள் இயந்திரமயமாதல்.
- மகிழ்வூட்டலுக்கு அதிக முன்னுரிமை வழங்கப்படுதல் .
- மனிதன் தனிமையான ஒருவனாகத் தனிமைப்படுத்தப்படுதல் .
- புலக்காட்சிப் பண்பாட்டை நோக்கி நகர்தல்.
- பொருட்கள் மற்றும் சேவைகள் அதிக நுகர்வுக்கு உட்படுதல்.
- வணிகமயப்படுத்தலுக்கு உள்ளாகுதல், அதனால் தொலைக்காட்சி நிகழ்ச்சிகளின் உள்ளடக்கத்தில் மாற்றம் ஏற்படுதல்.
- சமூகத்தின் சில பிரிவினர் பிரதிநிதித்துவப்படுத்தபடாமை.

**4x2= 8 புள்ளிகள்**